வடியிட்ட செந்தமிழி னருமையிட் டாருரி
லரிவையோர பரவைவாயி
மைமட்டு மடிபிட்டு நடைநடந் தருளடிக
ளடியீது முடியீதென
வடிபிட்ட மறைபேசு பசிளங் கிளலையே
வளமருவு தேவையரசே
வரைராச னுககிருஷண் மணியா யுதிததமலை
வளர்கா தலிப பெண்ணுமையே. (௪)

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
யுராநசுகிநரி யமபகியெழிற
புங்கவி விளங்குசிவ சங்கரி சகலாதார
புவிசுபமிசை வீற்றிருக்கு
நாரணி மனுநீத நாயகிகுணாதீத
நாதாந்த சததிபெணறுன
னுமமே யுசசரித திருவடியா நாமமே
நானுச சரிக்கவசமோ
வாரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழு
மகிலாண்ட கோடியீன்ற
வனனையே பின்னையுங் கன்னியென மறைபேசு
மானநத ரூபமயிலே
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைப்புகழ்
வளமருவு தேவையரசே
வரைராச னுசகிருஷண மணியா யுதிததமலை
வளர்கா தலிபபெண்ணுமையே (௫)

பாசமோ பெறவிலைப பாடவறி யேனமல
பரிபாகம வரவுமனதிற
பணபுமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
டாவியேன பாபரூப
தேகமோ திடமிலலை ஞானமோ கனவிலுஞ
சிந்தியேன் பேரினபமோ
சேரவென றுறகளள மனதுமோ மெததவுஞ
சிந்திககு தெனசெயகுவேன்
மோகமோ மதமோ குரோதமோ லோபமோ
சமூற்றுமாற் சரியமோதான
முற்றியிட் டெனைக்கொளளு நிதியமோ தேடவெனின்
மூசுவரி வணடுபோல

மாகமோ டவும்வல்ல னெனையாள வல்லையோ
வளமருவு நேமையரசே
வரைராச னுக்கிருகண மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெணுமையே. (௬)

தூளேறு தூசிபோல் வினையேறு மெயயெனுந்
தொகைகினுட் சிக்கிநாளுரு
சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவையெல்லா
நாளேற நாளேற வாாததிக மெனுங்கூற்றி
னட்பேற வுளளுடைநதூ
நயனஙக ளற்றதோ ரூரேறு போலவே
நாவிலந தனிலலையவோ
வேளேறு தந்தியைக கனதநதி யுடன்வெனறு
விரையேறு மாலைசூடி
விணணேறு மேகஙகள வெற்பேறி மறைவுற
வெருட்டிய சருஙகூநதலாய
வாளேறு கண்ணியே விடையேறு மெம்பிரான
மனதுக கிசைநதமயிலே
வரைராச னுககிருகண மணியா யுதிதநமலை
வளர்கா தலிப்பெணுமையே. (௭)

பூதமொடு பழகிவள ரிந்திரிய மாமபேயகள்
புந்திமுத லானபேய்கள
போராடு கோபாதி ராக்ஷசப் பேயகளென
போதத்தை யூடழிததது
வேதனை வளாததிடச சதுரவேத வஞ்சன்
விதிததானிவ வல்லலெல்லாம
வீழும் புடிககுனது மௌனமங் தராதிகய
விதைதயை வியந்தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமநதர ரூபியே
நாதாந்த வெட்டவெளியே
நறசமய மாணபயிர் தழையவரு மேகயே
ஞானவா னநதமயிலே
வாதமிடு பரசமயம யாவுக்கு முணாவரிய
மகிமைபெறு பெரியபொருளே
வரைராச னுக்கிருகண மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெணுமையே. (௮)



## அகிலாண்டநாயகி சந்தவிருத்தம்.

வட்ட மிட்டொளிர பிராண வாயுவெனு
    நிகள யோகமெ னஞ்செயு
மனமெ னுமபெரிய மதத யானையையென
    வசம டககிடின்மு மணடலத
இட்ட முற்றவள ராச யோகமிவன
    யோக மெனறறிஞா புகழவே
யேழை யேனுலகி னீடு வாழ்வனினி
    யிஙகி தரகுயனு மானமோ
பட்ட வாததனா பராவு சகாதர
    பாரய மானசுப யோகமும
பார காவிய கவிதவ ஞானமறை
    பாரப ணஞ்செயமதி பூரமு
மட்ட சிததியுர லனப ருககருள
    விருது கட்டியபொ னனமே
யணட கோடிபுகழ காவை வாழுமகி
    லாணட நாயகியெ னமமையே. (௧)

## பெரியநாயகி விருத்தம்.

காறறைப் பிடிததுமட கரகத தடைததபடி
    கனமப புனறகுளுறுக
கடைகெடட நவவாயில டெற்றபசு மடகலக
    காயதது ளளையிருததிச
சோறறைச சுமததிநீ பாதிதது வைககத
    துருசதிக்கண மதுவெனனவே
துள்ளித துடிதநெனன பேறுபெற றேனருட
    டோயநீ பாயசசலசெய்து
காறறைப் பதிததநெனை ஞானமாம பயிரதனை
    நாட்டிட புலப்பட்டியு
நமனுன நீடபூடு மணுகாமன முன்னின்று
    நாடுசிவ போகமான
பேற்றைப பகுக்தருளி யெனையாள வல்லையோ
    பெரியவகி லாணடகோடி
பெற்றநாயகி பெரிய கயிலைமா நகாமருவு
    பெரியநா யகியமமையே. (௧)

மாடுமக்கள்சிறந்திடையார்செம்பொன்னுடை
வைத்தகனத்தனமேடைமாடகூடம்
வீடுமெனப்பாரொடாசியோவிடைவிடாமன
மிக்கத்திவீடென்றேவிளங்கல்வேண்டும். (௯)

விளங்கவெனக்குள்ளுள்ளேவிளங்காநின்ற
வேதகமேபோதகமேவிமலவாழ்வே
களங்கரகிதப்பொருளேயென்னைநீங்காக்
கண்ணுதலேநாதாந்தக்காட்சிப்பேறே (௧௦)

நாதமோநாதாந்தவெளியேசுத்த
ஞாதுருவேஞானமேஞேயமேநல்
வேதமேவேதமுடிவானமோன
வித்தேயிங்கெனையினிவிட்டிடாதே. (௧௧)

---

# கல்லாலின்.

கல்லாலினீழறனிலொருநால்வர்க்குங்
கடவுணீயுணர்த்துவதுங்கைகாட்டென்றாற்
சொல்லாலேசொலப்படுமோசொல்லுந்தன்மை
துரும்புபற்றிக்கடல்கடக்குந்துணிவேயன்றோ. (௧)

அன்றேவாமோவெனவுஞ்சமயகோடி
யத்தனையுமெவ்வேறாயற்றநேரே
நின்றாயேநீயெப்பெறுமாறெவ்வாறங்கே
நின்னருள்கொண்டறிவதல்லானெறிவேறுண்டோ. (௨)

நெறிபார்க்கினின்னையன்றிநிலையேவேறே
நிலநீர்தீக்காலுநீயலாத
குறியாதுமில்லையென்றால்யாங்களேவேறோ
கோதையொருகூறுடையாய்கூறாய்கூறாய். (௩)

கூறாயவைம்பூதச்சுமையைத்தாங்கிக்
குணமிலாமனமென்னும்பேய்க்குரங்கின்பின்னே
மாறாதவலையுடன்சுழலவென்னை
வைத்தனையேபரமேநின்மகிமைநன்றே. (௪)

நன்றெனவுந்தீதெனவுமெனக்கிங்குண்டோ
நானாகிநீயிருந்தநிலையாயுஞ்சற்றே
யின்றெனக்குவெளியானாலெல்லாம்வல்ல
விறைவாநின்னடியருடனிருந்துவாழ்வேன். (௫)

வாழ்வெனவுந்தாழ்வெனவுமிரண்டாப்பேசும்
வையகத்தார்கற்பனையாமயக்கமான
பாழ்வலையைக்கிழித்தறிவுசெயல்போய்வாழப்
பரமேநின்னானந்தப்பரவையெங்கே. (௬)

எங்கேயெங்கேயருளென்றிரந்தா
னேழையிவனெனவுமெண்ணியிசைக்கூறு
மங்கேயங்கேயெளிவந்தென்னையாண்ட
வாரமுதேயுனைக்காணப்பாலலந்துபோனேன். (௭)

போனநாட்கிரங்குவதேதொழிலாயிங்ஙன
பொருந்துநாளத்தனையும்போக்கினேனென
ஞானநாயகனேநின்மோனஞான
நாட்டமுற்றுவாழ்ந்திருக்குநாளெந்நாளோ. (௮)

நாட்பட்டகன்மமலமன்னவிதயத்தூடே
நாறுந்தேனேதுணையாநின்னாரிமாதுகண்
வாட்பட்டகாயமிந்தக்காயமென்றே
வன்கூற்றுமுயிர்பிடிக்கவருமன்நீதி. (௯)



நீதியெங்கேமறையெங்கேமண்விண்ணெங்கே
நித்தியராமவர்களெங்கேநெறிதப்பாத
சாதியெங்கேயொழுக்கமெங்கேயாக்கமெங்கே
தற்பரநீயின்றியொன்றைச்சமைப்பதானால். (௧௦)

ஆனாலும்யானென்னத்தீங்கற்றதெல்லா
மதுபோதுமத்தகைத்தானல்லவென்று
போனாலும்யானவனல்லானமோனப்
புண்ணியனேவேறொருபொருளைநாடேன். (௧௧)

பொருளேநின்பூரணமேலிட்டகாலம்
போக்குவரவுண்டோதற்போதமுண்டோ
விருடானுண்டோவல்லால்வெளிதானுண்டோ
வின்பமுண்டோதுன்பமுண்டோயாமங்குண்டோ. (௧௨)

கலங்காதநெஞ்சுடையஞானதீரர்
கடவுளுனைக்காணவேகாயமாதி
புலங்காணார்நானொருவனூனமப்பேசிப்
பொய்க்கூடுகாத்ததென்னபுதுமைகண்டாய். (உக)

கண்டிலையோயான்படும்பாடெல்லாமுன்று
கண்ணிருந்துந்தெரியாதோகசிந்துள்ளன்பர்
தொண்டரடித்தொண்டனன்றோகருணைநீங்காச்
சுத்தபரிபூரணமாஞ்சோதிநாதா. (உஉ)

சோதியாயிருட்பிழம்பைச்சூறையாடுந்
தூவெளியேயெனைத்தொடர்ந்துதொடர்ந்தெந்நாளும்
வாதியாநின்றவினைப்பகையைவென்று
வாழவேயிங்குனைப்பிரிந்துமயங்குகின்றேன். (உங)

மயக்குறுமென்மனமணுவாம்பாதைகாட்டி
வல்வினையைப்பறித்தனையேவாழ்வேநாயேன்
செயக்கடவதென்செயலெல்லாநின்றேயென்று
செங்கைகுவிப்பேனலாற்செயல்வேறில்லை. (உச)

வேறுபடுஞ்சமயமெல்லாம்புகுந்துபார்க்கின்
விளங்குபரம்பொருளேநின்விளையாட்டல்லால்
மாறுபடுங்கருத்தில்லைமுடிவின்மோன
வாரிதியினதித்திரள்போல்வயங்கிற்றம்மா. (உரு)

அம்மாவீததிசயந்தானன்றோவன்றோ
வகண்டநிலைபாக்கியெனையறிவாமலண்ணஞ்
சும்மாவேயிருக்கவைத்தாயையாவாங்கே
சுகமயமாயிருப்பதல்லாற்சொல்வானென்னே. (உசா)

என்னேநான்பிறந்துழலவந்தவாறிங்
கெனக்கெனவோசெயலில்லையேயேழையேன்றான்
முன்னேசெய்வினையெனவும்பின்னேவந்து
மூளும்வினையெனவுமவர்முறையேயென்றதாய (உஎ)

தாயானதண்ணருளைப்பிரம்பவைத்துத்
தமியேனைப்புரவாமற்றள்ளித்தள்ளிப்
போயானதென்சொல்லாயேகதேசம
பூரணத்துக்குண்டோதான்புகலல்வேண்டும். (உஅ)

புகலரியநின்விளையாட்டென்னேயெந்தாய்
புன்மையறிவுடையவென்னைப்பொருளாப்பண்ணி
யிகலவினைகருமமலமாயைகன்மத்தூடே
யிடருறவுஞ்செய்ததனையேயிரக்கமீதோ. (௨௯)

இரக்கமொடுபொறையீதலறிவாசார
மில்லேனல்லோர்களிட்டங்கண்டாற
கரக்குமியல்புடையேனப்பாழ்நெஞ்சமெந்தாய்
கருந்தாதோவல்லலுறக்கோக்கரியகல்லோ. (௩0)

---

## பராபரக்கண்ணி.

சீராருந்தெய்வத்திருவருளாம்பூமிமுதற
பாராதியாண்டபதியேபராபரமே. (௧)

கண்ணாரக்கண்டோர்கருப்பொருள்காணாமலருள்
விண்ணாடிருந்தவின்பவெற்பேபராபரமே. (௨)

சிந்தித்தவெல்லாமெனசிந்தையறிந்தேயுதவ
வந்தகருணைமழையேபராபரமே. (௩)

ஆராவமுதேயரசேயானந்தவெள்ளப்
பேராறேமோனப்பெருக்கேபராபரமே. (௪)

ஆரறிவாரென்னவனந்தமறையோலமிடும்
பேரறிவேயின்பப்பெருக்கேபராபரமே (௫)

உரையிறந்தவன்பருளத்தோங்கொளியாயோங்கிக்
கரையிறந்தவின்பக்கடலேபராபரமே. (௬)

எத்திக்குந்தானாகியென்னிதயத்தேயூறித்
தித்திக்குமானந்தத்தேனேபராபரமே (௭)

திக்கொடுகீழ்மேலுந்திருவருளாம்பொற்பறிந்தோர்
கைக்குள்வளர்கொல்லிக்கனியேபராபரமே. (௮)

முத்தேபவளமேமொய்த்தபசும்பொற்சுடரே
சித்தேயென்னுள்ளத்தெளிவேபராபரமே. (௯)

கண்ணேகருத்தேயெனகற்பகமேகண்ணிறைந்த
விண்ணேயானந்தவியப்பேபராபரமே (௧0)

வாக்காய்மனதாய்மனவாக்கிறந்தவர்பாற்
றூக்காதேதாக்குந்தனியேபராபரமே. (கக)

பார்த்தவிடமெல்லாம்பரவெளியாய்த்தோன்றவொரு
வார்த்தைசொலவந்தமனுவேபராபரமே. (கஉ)

ஆனந்தமானநினைந்தம்வைத்துவைத்துப்பார்க்கவெனக்
கானந்தந்தந்தவரசேபராபரமே. (கங)

அன்பைப்பெருக்கியெனதாருயிரைக்காக்கவந்த
வின்பப்பெருக்கேயிறையேபராபரமே. (கச)

வானமெல்லாங்கொண்டமவுனமணிப்பெட்டகத்துக்
கானபணியான்வணியேபராபரமே. (கரு)

ஓடுமிருநிதியுமொன்றாகக்கண்டவர்க
ணாடும்பொருளானநட்பேபராபரமே (கசு)

சித்தநினைவுஞ்செயுஞ்செயலுநீயெனவா
ழுத்தமர்கட்கானவுறவேபராபரமே. (கஎ)

போதாந்தப்புண்ணியர்கள்போற்றிசயபோற்றியெனும்
வேதாந்தவீட்டில்விளக்கேபராபரமே (கஅ)

பூதாந்தவீதியுளறிதொழுமன்பருக்கே
சித்தாந்தவீதிவருந்தேவேபராபரமே (கக)

ஈனந்தருமுடலமென்னதியானென்பதற
வானந்தமவேண்டியலந்தேன்பராபரமே. (உ0)

என்புருகிநெஞ்சமிளகிக்கரைந்துகரைந்
தன்புருவாய்நிற்கவலந்தேன்பராபரமே (உக)

சுத்தவறிவாய்ச்சுகப்பொருந்தினல்லாலென்
சித்தந்தெளியாதென்செய்வேன்பராபரமே. (உஉ)

மாறுவனுபூதிவாய்க்கினல்லாலென்மயக்கந்
தேறுதென்செய்வேன்சிவமேபராபரமே. (உங)

தாகமறிந்தின்பநிட்டைதாராயேல்யான்கெடுவேன்
றேகம்விழுந்திடினென்செய்வேன்பராபரமே. (உச)

அப்பாவென்னெய்ப்பில்வைப்பேயாற்றகிலேன்போற்றியென்று
செப்புவதல்லால்வேறென்செய்வேன்பராபரமே. (உரு)

உற்றறியுமென்னறிவுமுட்கருவிபோற்சலிமாண
டற்றுமின்பாதந்திலையேயையாபராபரமே. (உசு)

சொல்லாலடங்காச்சுகக்கடலில்வாய்மடுக்கி
னல்லாலென்றாகமறுமோபராபரமே. (உஎ)

பாராயோவென்னைமுகம்பார்த்தொருகாலென்கவலை
தீராயோவாய்திறந்துசெப்பாய்பராபரமே. (உஅ)

ஓயாதோவென்கவலையுள்ளேயானந்தவெள்ளம்
பாயாதோவையாபகராய்பராபரமே. (உகூ)

ஓகோவுனைப்பிரிந்தாருள்ளங்கனலில்வைத்த
பாகோமெழுகோபகராய்பராபரமே (கூ0)

கூடாதவறிவத்தனையுங்கொள்ளைகொடுத்துன்னருளைப்
பாராதவனென்னைமுகம்பாராய்பராபரமே. (கூக)

கடலமுதேதேனேயென்கண்ணேகவலைப்
படமுடியாதென்னைமுகம்பாரீர்பராபரமே. (கூஉ)

உள்ளமறிவாயுழப்பறிவாய்நானேழை
தள்ளிவிடின்மெத்தத்தவிப்பேன்பராபரமே. (கூகூ)

கன்றினுக்குச்சேதாகனிந்திரங்கல்போலவெனக்
கென்றிரங்குவாய்கருணையெந்தாய்பராபரமே. (கூச)

எண்ணாதவெண்ணமெலாமெண்ணியெண்ணியேழைநெஞ்சம்
புண்ணாகச்செய்ததினிப்போதும்பராபரமே. (கூரு)

ஆழித்துரும்பெனவேயங்குமிங்குமுன்னடிமை
பாழிற்றிரிவதென்னபாவம்பராபரமே (கூசா)

கற்றவறிவாலுனைநான்கண்டவன்போற்கூத்தாடிற்
குற்றமென்றென்னெஞ்சேகொதிக்கும்பராபரமே. (கூஎ)

ஐயோவுனைக்காணவாசைகொண்டவத்தனையும்
பொய்யோவெளியாப்புகலாய்பராபரமே. (கூஅ)

துன்பக்கண்ணீரிற்றுளைந்தேற்குன்னானந்த
வின்பக்கண்ணீர்வருவதெந்நாள்பராபரமே (கூகூ)

வஞ்சனையும்பொய்யுமுள்ளேவைத்தழுக்காறாயுளறு
நெஞ்சனுக்குமுண்டோநெறிதான்பராபரமே. (ச0)

பாசம்போய்நின்றவர்போற்பாராட்டியானுலகு
மோசம்போனேனென்முறையோபராபரமே (சக)

நன்றறியேன்றீதறியேனென்றாநின்றவனு
மொன்றறியேனேழையென்னேபராபரமே. (சஉ)

இன்றுபுதிதன்றேயெளியேன்படுந்துயர
மொன்றுமறியாயோவுரையாய்பராபரமே. (௪௩)

எத்தனைதான்சன்மமெடுத்தெத்தனைநான்பட்டதுய
ரத்தனையுநீயறிந்ததன்றோபராபரமே. (௪௪)

இந்நாட்சற்றுமிரங்கிலையேற்காலன்வரு
மந்நாட்காக்கவல்லாரார்காண்பராபரமே. (௪௫)

உற்றற்றநாடியுளமருண்டபாவியைநீ
சற்றிரங்கியாளத்தகாதோபராபரமே. (௪௬)

எள்ளளவுநின்னைவிடவில்லாவென்னைமயக்கிற்
றள்ளுதலாலென்னபலன்சாற்றாய்பராபரமே (௪௭)

பாடிப்படித்துலகம்பாராட்டநிற்பதற்கோ
தேடியெனையடிமைசேர்த்தாய்பராபரமே. (௪௮)

சொன்னதைச்சொல்வதல்லாற்சொல்லறவென்னசொல்லிறந்தக்
கென்னதைச்சொல்வேனெளியேன்பராபரமே (௪௯)

சொல்லும்பொருளுமறச்சும்மாவிருப்பதற்கே
யல்லும்பகலுமெனக்காசைபராபரமே. (௫0)

நேசநிருவிகற்பநிட்டையல்லாலுன்னடிமைக்
காசையுண்டோநீயறியாதன்றேபராபரமே (௫௧)

துச்சமெனவேண்டாமித்தொல்லுலகில்லல்லல்கண்டா
லச்சமிகவுடையேனையாபராபரமே. (௫௨)

கண்ணுவாரேனுமுனைக்கைகூவியாராயினந்த
மண்ணுவார்நட்பைமதியேன்பராபரமே. (௫௩)

கொல்லாவிரதங்குவலயமெல்லாமோங்க
வெல்லார்க்குஞ்சொல்லுவதென்னிச்சைபராபரமே. (௫௪)

எத்தாற்பிழைப்பேனோவெந்தையேநின்னருட்கே
பித்தானேனென்னமெத்தவுநான்பேதைபராபரமே (௫௫)

வாயினாற்பேசாமவுனத்தைவைத்திருந்துந்
தாயிலார்போன்றுதளர்ந்தேன்பராபரமே. (௫௬)

அன்னையிலாச்சேய்போலலக்கணுற்றேன்கண்ணா
ரென்னகதித்தாய்போலிருக்கும்பராபரமே. (௫௭)

உற்றநினைக்கிற்றுயரமுள்ளுள்ளேசெந்தீயாய்ப்
பற்றிக்கொண்டதேயென்னைமுகம்பார்நீபராபரமே. (௫௮)

பொய்யனிவ னென்றுமெள்ளப் போதிப்பார் சொற்கேட்டுக்
கைவிடவும் வேண்டாமென் கண்ணே பராபரமே. (௫௯)

எண்ணமறிந் தேயிளைப்ப றிந்தேயே ழையுய்ய
உண்ணத் திருக்கருணை வையாய் பராபரமே. (௬௦)

நாட்டாதே யென்னையொன் றினாட்டி யிதமகிதங்
காட்டாதே யெல்லாங்கண் டாய்பராபரமே (௬௧)

உன்னைநினைந் துன்னிறைவி னுள்ளேயுலாவுமென்னை
யன்னைவயிற் றின்னமடைக் காதே பராபரமே. (௬௨)

பாருனக்கென் றெண்ணும் பழக்கமே மாறா
வரமெனக்குத் தந்தருளென் வாழ்வே பராபரமே. (௬௩)

வந்தித்து நின்னை மறவாக் கடாட்சச்
சிந்திக்க நின்னைத் தருள்செய்யாய் பராபரமே (௬௪)

எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணியிரங் கவுநின்
றெய்வ அருட் கருணை செய்யாய் பராபரமே. (௬௫)

வெட்டவெளிப் பேதையன்யான் வேறாகப் போனறியேன்
சிட்டருடன் சேரானந் தந்தெண்டன் பராபரமே. (௬௬)

இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே. (௬௭)

மால்காட்டிச் சிந்தைமயங் காமனின் றுச்சக்
கால்காட்டி வாங்காதே கண்டாய் பராபரமே. (௬௮)

எப்பொருளு நீயெனவே யெண்ணிநான் றேனுற்ற
வைப்பையழி யாநிலையா வையாய் பராபரமே. (௬௯)

சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றம்மா லறிந்தறக் கெளிதோ பராபரமே. (௭௦)

முன்னோடு பின்பக்க முடியடிநாப் பண்ணறநின்
றன்னோடொன் றிறப்தென் றேசாற்றாய் பராபரமே (௭௧)

மைவண்ணந் தீரத்த மவுனிசொன்ன தெவ்வண்ண
மவ்வண்ண நிட்டையருளாய் பராபரமே. (௭௨)

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே. (௭௩)

ஆங்கார மற்றுன் னறிவான வன்பருக்கே
தூங்காத் தூக்கமது தூக்கும் பராபரமே. (௭௪)

சிந்தையவிழ்ந்தவிழ்ந்துசின்மயமாநின்னடிக்கே
வந்தவர்க்கேயின்பநிலைவாய்க்கும்பராபரமே (௭௫)

சொல்லாலுமனைப்போற்சொல்லிறந்துநீயாகி
னல்லாலெனக்குறுதியாமோபராபரமே. (௭௬)

பேச்சாகாமோனமபிறவாமுளைத்தென்னற
காச்சாசுமேறபயனுண்டாமோபராபரமே. (௭௭)

கெட்டியெனநின்னையபாமலக்கெட்டயாந்தோராபூரணமாந
தொட்டிலுக்குட்செயபோறறுயினன்றோபராபரமே. (௭௮)

காட்டவருநீயிருக்கக்காணாதிருண்மலத்து
நாட்டமெனக்குவரனன்றோபராபரமே. (௭௯)

எத்தனைக்குற்றமியற்றிடினுந்தாய்பொறுக்கு
மத்தன்மைநின்னருளுமன்றோபராபரமே. (௮௦)

எத்தனைபோதோநாதாலுமென்னுளேயின்பமுண்டோ
சித்துருவேயின்பசிவமேபராபரமே. (௮௧)

மண்ணொடுவிண்காட்டிமறைந்தமறைபாவருளைக்
கண்ணொடுகண்ணாகவென்றுகாண்பேன்பராபரமே. (௮௨)

பஞ்சரித்துநின்னைப்பலகாலிரந்ததெல்லா
மஞ்சலெனும்பொருட்டேயன்றோபராபரமே. (௮௩)

எங்கெங்கேபார்த்தாலுமெவ்வுயிர்க்குமவ்வுயிரா
யங்கங்கிருப்பதுநீயன்றோபராபரமே (௮௪)

அனைத்துமாய்நின்றுபேயானவேறன்றேநினை
நினைக்குமாறெங்கேநிகழ்த்தாய்பராபரமே. (௮௫)

நின்போதத்தாலேநினைப்புமறப்புமென்று
லெம்போதமெங்கேயியம்பாய்பராபரமே. (௮௬)

ஒன்றைநினைந்தொன்றைமறந்தோடுமனமெல்லாநீ
யென்றறிந்தாலெங்கேயிருக்கும்பராபரமே. (௮௭)

கொழுந்திலவயிரமெனக்கோதறவுள்ளன்பி
லழுந்துமவர்க்கேசுகமுண்டாகும்பராபரமே. (௮௮)

பற்றும்பயிர்க்குப்படர்கொழுந்துபோற்பருவம்
பெற்றவர்க்கேநின்னருடான்பேறாம்பராபரமே. (௮௯)

யோகியர்க்கேஞானமொழுங்காம்பேரன்பான
தாகியரும்யோகமுன்னேசார்ந்தோர்பராபரமே. (௯௦)

அல்லும்பகலுமறிவாகிநின்றவர்க்கே
சொல்லும்பொருளுஞ்சுமைகாண்பராபரமே (கூக)

எச்சிலென்றுபூவையிகழ்ந்தோர்சுகுணைபோற்றப்
பசிலையுங்கிள்ளப்படுமோபராபரமே. (கூஉ)

அந்தக்கரணமடங்கத்துறப்பதுவே
யெந்தத்துறவினுநன்றெந்தாய்பராபரமே. (கூங)

தன்னையறிந்தாற்றலைவன்மேற்பற்றலது
பின்னையொருபற்றுமுண்டோபேசாய்பராபரமே (கூச)

அன்பாற்கரைந்துகண்ணீராறுகண்டபுண்ணியர்க்
குன்பாலவரவழிதானுண்டோபராபரமே. (கூரு)

தன்னையறிந்தருளேதாரகமாநிற்பதுவே
யுன்னையறிதற்குபாயம்பராபரமே. (கூசா)

கற்றகலையானிலைதான்காணுமோகாணப்பெறலா
மற்றவிடத்தேவெளியாமன்றோபராபரமே (கூஎ)

கண்மூடிக்கண்விழித்துக்காணவுண்டோநின்னருளா
விண்மூடினெல்லாம்வெளியாம்பராபரமே. (கூஅ)

நேரேநின்றருளென்னெஞ்சைக்கவர்ந்தென்றும்
பாரேனசுகமும்படைப்பேன்பராபரமே. (கூகூ)

வான்காணவேண்டினமலையேறலொக்குமன்னே
நான்காணப்பாவனைசெய்நாட்டம்பராபரமே (க00)

வாதனைவிட்டேனருளின்மன்னிலல்லால்வேறுமொரு
சாதனைதானுண்டோநீசாற்றாய்பராபரமே. (க0க)

பாரகமும்விண்ணகமும்பற்றறநிற்பதருட்
டாரகத்தைப்பற்றியன்றோ சாற்றாய்பராபரமே. (க0உ)

விளக்குந்தகளியையும்வேறெனஞானினைந்த
துளக்கமறச்சிவனென்றுசொல்லவாய்பராபரமே. (க0ங)

பாராதிநீயாப்பகர்ந்தாலகமெனவு
மாராயுஞ்சீவனுநீயாங்காண்பராபரமே. (க0ச)

பொய்யைப்பொய்யென்றறியும்போதத்துக்காதரவுன்
மெய்யருளேயன்றோவிளம்பாய்பராபரமே. (க0ரு)

வருவான்வந்தேனெனல்போன்மன்னியழியுஞ்சகத்தைத்
தெரிவாகவில்லையென்றதீரம்பராபரமே. (க0சா)

எந்தெந்நாளுமோனப்பிரியாதெனதுயிராய்ச்
சிந்தைகுடிகொண்டருட்டேவேபராபரமே. (க௨௩)

அஞ்சலஞ்சலென்றடிமைக்கபயமோதத்தக்கப்போதே
நெஞ்சிலுணர்த்துநிறைவேபராபரமே. (க௨௪)

என்னையுன்றன்கைக்களித்தாரியாவரென்னையான்கொடுத்துப்
பின்னையுன்றனைப்பெற்றநலம்பேசேன்பராபரமே. (க௨௫)

வாய்பேசாவூமையெனவைத்தவென்றோமேவுனது
தாயாகவந்தருளைத்தந்தாய்பராபரமே (க௨௬)

தன்னைத்தந்தென்னைத்தடுத்தாண்டநின்கருணைக்
கென்னைக்கொண்டென்னபலனெந்தாய்பராபரமே. (க௨௭)

மார்க்கண்டர்க்காகமறலிபட்டபாட்டைநினைப்
பாக்கினனபாகமென்னடையங்காணபராபரமே. (க௨௮)

சுட்டியுணராமற்றறியநிலையாரும்வெளியில்
விட்டநினையாமேறுவியப்பேன்பராபரமே. (க௨௯)

ஏதொன்றுமின்றியென்னைச்சும்மாவிருக்கவைத்தா
யீதொன்றும்போதாதோவின்னம்பராபரமே. (க௩0)

வாயொன்றும்பேசாமௌனியாய்வந்தாண்ட
தேயொன்றும்போதாதோசொல்லினபயபராபரமே, (க௩௧)

என்றுமிருந்தபடிக்கென்னையெனக்களித்த
தொன்றும்போதாதோவுரையாய்பராபரமே (க௩௨)

எண்டிசைகீழ்மேலானவெல்லாம்பெருவெளியாக
கண்டவிடத்தென்னையுநான்கண்டேன்பராபரமே. (க௩௩)

பித்தனையேதுமறியாப்பேதையனையாண்டவுனக்
கெத்தனைதானறெண்டனிடுவேன்பராபரமே (க௩௪)

தாயாகாப்பத்தூடனமுதணைஞ்சந்தருளு
நேயவுனையாரேநினையார்பராபரமே. (க௩௫)

விரிந்தமனமொடுங்குமவேளையினுஞ்சுகப
பரந்தவருள்வாழிபதியேபராபரமே. (க௩௬)

சிந்தனைபோய்நானெனல்போய்த்தேக்கவின்பமாமழையை
வந்துபொழிந்தனைநீவாழிபராபரமே. (க௩௭)

தந்தேனையோரவசனந்தந்தபடிக்கின்பமுமாய்
வந்தேனையென்றனைநீவாழிபராபரமே. (க௩௮)

மண்ணும்விண்ணும்வந்துவணங்காவோநின்னருளைக்
கண்ணுறவுட்கண்டவர்கள்கண்டார்பராபரமே. (கஙகூ)

என்றுங்கருணைபெற்றவின்பத்தபோதனர்சொல்
சென்றசென்றதிக்கனைத்துஞ்செல்லும்பராபரமே. (கச0)

ஆடுவதும்பாடுவதுமானந்தமாகநினைத்
தேடுவதுநின்னடியார்செய்கைபராபரமே (கசக)

பொங்கியநின்றண்ணருளைப்புட்கலமாப்பெற்றவர்கட்
கெங்கெழுந்தென்ஞாயிறியம்பாயபராபரமே. (கசஉ)

பாலரொடுபேயர்பித்தர்பான்மையெனநிற்பதுவே
சீலமிகுஞானியர்தஞ்செய்கைபராபரமே. (கசங)

உண்டுடுத்துப்பூண்டிங்குலகத்தார்போற்றிரியுந்
தொண்டர்விளையாட்டேசுகங்காண்பராபரமே (கசச)

கங்குல்பகலற்றதிருக்காட்சியர்கள்கண்டவழி
யெங்குமொருவழியேயெந்தாய்பராபரமே (கசரு)

காயநிலையல்லவென்றுகாண்பாருறங்குவரோ
தூயவருட்பற்றுந்தொடர்வார்பராபரமே (கசசு)

அப்புமுப்பும்போன்றவயிக்கியபரானந்தமங்
கொப்புவமைசொல்லவுமுண்டோபராபரமே. (கசஎ)

சித்தந்தெளிந்துசிவமானோரெல்லோர்க்குங்
கொத்தடிமையானகுடிநானபராபரமே (கசஅ)

தம்முயிர்போலெவ்வுயிருந்தாமென்றுதண்ணருள்கூர்
செம்மையருக்கேவலென்றுசெய்வேன்பராபரமே. (கசகூ)

விண்ணுக்கும்விண்ணாகிமேவுமுனக்கியானபூசை
பண்ணிநிற்குமாறுபகராய்பராபரமே. (கரு0)

நெஞ்சகமேகோயினினைவேசுகந்தமன்பே
மஞ்சனநீர்பூசைகொள்ளவாராய்பராபரமே. (கருக)

கெட்டவழிபாணவப்பேய்கீழாகமேலான
சிட்டருனைப்பூசைசெய்வார்பராபரமே. (கருஉ)

காலபிடித்துமூலக்கனலைமதிமண்டலத்தின்
மேலெழுப்பிறதேகமவிழுமோபராபரமே. (கருங)

பஞ்சசுத்திசெய்துநினைப்பாவித்துப்பூசைசெய்தால்
விஞ்சியஞானம்விளங்குமபராபரமே. (கருச)

அன்பர்பணிசெய்யவென்னையாளாக்கிவிட்டுவிட்டா
லின்பநிலைதானேவந்தெய்தும்பராபரமே. (௧௫௫)

மூர்த்திதலந்தீர்த்தமுறையாற்றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச்சற்குருவும்வாய்க்கும்பராபரமே (௧௫௬)

விரும்புஞ்சரியைமுதன்மெய்ஞ்ஞானநான்கு
மரும்புமலர்காய்கனிபோலன்றோபராபரமே. (௧௫௭)

தானந்தவந்தருமஞ்சந்ததமுஞ்செய்வார்சிவ
ஞானந்தனையணையநல்லோபராபரமே. (௧௫௮)

சொன்னதைச்சொல்லித்துதிக்கின்றவாணவப்பேய்க்
கின்னல்வருவதெந்நாளெந்தாய்பராபரமே. (௧௫௯)

இன்றோவிருவினைவந்தேறியதுநானென்றோ
வன்றேவிளைந்ததன்றோவாற்றேன்பராபரமே (௧௬௦)

எண்ணமுந்தானின்னைவிட வில்லையென்றால் யானுமே
பண்ணவினையேதுபகராய்பராபரமே (௧௬௧)

என்னையின்னதென்றறியாவேழைக்குமாகெடுவென
முன்னைவினைகூடன்முறையோபராபரமே. (௧௬௨)

அறியாதசெய்வினையையையாநீகூட்டுங்
குறியேதெனக்குளவுகூறாய்பராபரமே. (௧௬௩)

என்னைக்கெடுக்கவிசைந்தவிருவினைநோய்
தன்னைக்கெடுக்கத்தகாதோபராபரமே. (௧௬௪)

வல்லமையேகாட்டுகின்றமாமாயைநாடொருவ
னில்லையெனினெங்கேயிருக்கும்பராபரமே. (௧௬௫)

முக்குணத்தாலெல்லாமூழ்க்கப்பிரகிருதிக்
கிக்குணத்தைநல்கியதாரெந்தாய்பராபரமே. (௧௬௬)

ஆற்றப்படாதுதுன்பமையவென்றாலென்மனது
தேற்றப்படாதினியென்செய்வேன்பராபரமே. (௧௬௭)

பூராயமாய் மனதைப்போகவறியாமலையோ
யாராயலாந்தேனரசேபராபரமே (௧௬௮)

சினமிறக்கக்கற்றாலுஞ்சித்தியெல்லாம்பெற்றாலு
மனமிறக்கக்கல்லார்க்குவாயேன்பராபரமே (௧௬௯)

வாதுக்குவந்தெதிர்த்தவல்லவரைப்போற்பாழ்த்தமன
மேதுக்குக்கூத்தாடுதெந்தாய்பராபரமே. (௧௭௦)

சூதாடுவோர்போற்றுவண்டுதுவண்டுமனம்
வாதாடினென்னபலன்வாய்க்கும்பராபரமே. (கஎக)

கொள்ளித்தேள்கொட்டிக்குதிக்கின்றபேய்க்குரங்காய்க்
கள்ளமனந்துள்ளுவதென்கண்டாய்பராபரமே. (கஎஉ)

வந்ததையும்போனதையுமவைத்துவைத்துப்பாராதிருந்தாற்
சிந்தையிசமகிதஞ்சேருமபராபரமே. (கஎங)

ஏறுமயிர்ப்பாலமுணர்விந்தவிடயங்கணொருப்
பாறெனவுநன்றுவறிந்தேன்பராபரமே. (கஎச)

பொறிவழியேயேழைப்பொறியாயுழலவதுநின்
னறிவினவிதித்தவிதியாமோபராபரமே. (கஎரு)

பாசசாலங்களெல்லாம்பற்றுவிடஞானவைவாள்
வீசுநாளெந்நாள்விளம்பாய்பராபரமே. (கஎசு)

எந்தவுடலேனுமெடுத்தவுடனல்லதென்று
சிந்தைசெயவந்திறஞ்செப்பாய்பராபரமே. (கஎஎ)

பொய்யெல்லாமொன்றாப்பொருத்திவைத்தபொய்யுடலை
மெய்யென்றனமெய்யாய்விடுமோபராபரமே. (கஎஅ)

மின்னனையபொய்யுடலைமெய்யென்றுநம்பியையோ
நின்னைமறக்கைநெறியோபராபரமே (கஎகூ)

நித்தியமொன்றில்லாதநீர்க்குமிழிபோன்றவுடற்
கித்தனைதானற்பமுண்டோவென்னேபராபரமே. (கஅ0)

தேகமிறுமென்றுசடர்தேயபுவதென்னித்திரையி
னாகமறிந்தாற்பயந்தானுண்டோபராபரமே. (கஅக)

ஏதைச்சுமையாவெடுப்பாரெடுத்தவுடற்
சேதமுறின்யாதுபின்னேசெல்லுமபராபரமே (கஅஉ)

தோற்பாவைநாலாட்சுமையாகுஞ்சீவனென்றிங்
காப்பாலெடுத்ததெவராலேபராபரமே. (கஅங)

ஞாலத்தைமெய்யெனவேநம்பிநம்பிநாளுமென்றன்
காலத்தைப்போக்கியென்னகண்டேன்பராபரமே. (கஅச)

பொய்யுலகவாழ்க்கைப்புலைச்சேரிவாதனைநின்
மெய்யருளின்மூழ்கின்விடுங்காண்பராபரமே. (கஅரு)

நூலேணிவிண்ணேறநூற்குப்பரிதிவைப்பார்
போலேகருவிகண்ணூற்போதம்பராபரமே. (கஅசு)

சின்னஞ்சிறியர்கள்செய்தமணற்சோற்றையொக்கு
மன்னுசகலஞானமாக்கம்பராபரமே. (கஅஎ)

வாசகஞானத்தால்வருமோசுகம்பாழ்த்த
பூசலென்றுபோமோபுகலாய்பராபரமே. (கஅஅ)

கேட்டதையேசொல்லுங்கிளிபோல்நின்னருளி
னாட்டமின்றிவாய்பேசனன்றோபராபரமே (கஅகூ)

வெளியாயருவில்விரவுமன்பாதேக
மொளியாய்ப்பிறங்கியதுமுண்டோபராபரமே. (ககூ0)

காலமொருமூன்றுங்கருத்திலுணர்ந்தாலுமதை
ஞாலத்தனக்குறைபார்நல்லோர்பராபரமே. (ககூக)

சொல்லாவிரதமொன்றுகொண்டவரேநல்லோர்மற்
றல்லாதாரியாரோவறியேன்பராபரமே. (ககூஉ)

இல்லாதகாரியத்தையிச்சித்துச்சிந்தைவழி
செல்லாமைநல்லோர்திறங்காண்பராபரமே (ககூங)

ஏதுவந்துமேதொழிந்துமென்னநியாமென்னநாங்கள்
போதமிலைகண்டபுலத்தோர்பராபரமே. (ககூ௪)

ஆயிரஞ்சொன்னாலுமறியாதவஞ்சநெஞ்சப்
பேயரொடுகூடிற்பிழைகாண்பராபரமே (ககூரு)

மாயமயக்கொழிந்தார்மற்றொன்றைநாடுவரோ
நேயவருணிலையினிற்பார்பராபரமே. (ககூசு)

நித்திரையிற்செத்தபிணநேருமுடற்கிச்சைவையாச்
சுத்தர்களேநல்லதுறவோர்பராபரமே. (ககூஎ)

என்னெஞ்சமேனுமிரங்குமேநின்னருட்குக்
கன்னெஞ்சருமுளரோகாட்டாய்பராபரமே (ககூஅ)

மந்தவறிவாகியின்பமவாயாதிருந்தலைந்தாற்
சிந்தைமயங்காதோவென்செய்வேன்பராபரமே. (ககூகூ)

தேடினேன்றிக்கனைத்துந்தெண்டனிட்டேன்சிந்தைநைந்து
வாடினேனென்மயக்கமாற்றாய்பராபரமே. (உ00)

மடிமையெனுமொன்றைமறுத்தன்றோவென்னை
யடிமைகொள்வேண்டுமரசேபராபரமே. (உ0க)

காலயந்திரவின்பக்காற்பயமென்றெழுந்த
மால்வனாதனையேவாழிபராபரமே. (உ0உ)

நீர்ப்புற்புதமாய்நினைவருட்கேநின்றழியப்
பார்ப்பதல்லால்வேறுமொன்றைப்பாரேன்பராபரமே. (உ0௩)

நீர்க்குமிழிபோலெனனினைவுவெளிபாய்க்கரையப்
பார்க்குமிடமெல்லாமென்பார்வைபராபரமே. (உ0௪)

ஆடியோய்பம்பரம்போலாசையுடனெங்குமுழன்றுத்
தேடியோய்ந்தேனென்னசெய்வேன்பராபரமே. (உ0௫)

வேதாந்தஞ்சித்தாந்தம்வேறென்னாகண்களிக்கு
நாதாந்தமோனநலமேபராபரமே (உ0௬)

ஆனந்தமானநினையன்றியொன்றையுன்னாத
மோனந்தமியேற்குமுத்திபராபரமே. (உ0௭)

ஏதுக்குமுன்னைவிடவில்லையென்றவென்கருத்தைச்
சோதிக்கவேண்டாநான்சொன்னேன்பராபரமே. (உ0௮)

முத்தியிலுந்தேகமிசைமூவிதமாஞ்சித்திபெற்றோ
ரெத்தனைபேரென்றுரைப்பதெந்தாய்பராபரமே. (உ0௯)

நீயன்றிநானார்நினைவாரென்னெஞ்சகமார்
தாயன்றிசூலுமுண்டோசாற்றாய்பராபரமே. (உ௧0)

அகமேநின்வடிவமானசுகாகூப்பிடநீ
யெங்குமேனேனென்றதென்னேபராபரமே (உ௧௧)

கொள்ளைவெள்ளத்தண்ணருண்மேற்கொண்டுசூழ்ந்தார்த்திழுத்தா
ற், கள்ளமனக்கப்பலெங்கேகாணும்பராபரமே (உ௧௨)

ஏகக்கலையுங்கற்றுணர்ந்தோமென்றவாக்குஞ்சமமதஞ்சொல்
வக்கணையாலின்பம்வருமோபராபரமே. (உ௧௩)

கல்லெறியப்பாசிகலைந்துநன்னீர்காணுநல்லோர்
சொல்லுணரின்ஞானம்வந்துதோன்றும்பராபரமே. (உ௧௪)

நின்னையுணர்ந்தோர்க்கடிமைநிந்தித்தபேயறிஞ
ரென்னகதிபெறுவாரெந்தாய்பராபரமே. (உ௧௫)

என்னதியாவென்னனலற்றேரோங்கிருந்துபார்க்கினுநின்
சன்னிதியாநீபெரியசாமிபராபரமே. (உ௧௬)

சோற்றுத்துருத்திசுமைசுமப்பச்சனிதுங்கக்
காற்றைப்பிடித்தலைந்தேன்கண்டாய்பராபரமே (உ௧௭)

உள்ளபடியொன்றையுமோர்கினவர்க்குள்ளுறவாயக்
கள்ளமின்றியன்பாயகங்களிப்பேன்பராபரமே. (உ௧௮)

அடுத்தவியல்பாகவொன்றையான்பகர்வதல்லாற்
றொடுத்ததொன்றையானவேண்டிச்சொல்லேன்பராபரமே. ௨௧௯)

உள்ளமறியாதொருவரொன்றையுன்னிப்பேசிலேயோ
துள்ளியிளங்கன்றுயத்துடிப்பேன்பராபரமே. (௨௨௦)

எல்லாருமின்புற்றிருக்கநினைப்பதுவே
யல்லாமல்வேறொன்றறியேன்பராபரமே. (௨௨௧)

மூன்றுண்மெய்ஞ்ஞானமுனிவாதவமீட்டுதல்போ
லிந்நாளிற்காணவெனக்கிச்சைபராபரமே (௨௨௨)

கன்மமென்பதெல்லாங்கரிசறவேமெய்ஞ்ஞான
தன்மநிலைசாந்தத்தன்பாதன்மைபராபரமே. (௨௨௩)

குணமிலாதென்னறிவின்கண்ணூடேகாட்சிபெற
மண்டியபேரொளிநீவாழிபராபரமே. (௨௨௪)

நானெனதன்மையென்றுநாடாமனூடவினப
வானூகிநின்றனைநீவாழிபராபரமே (௨௨௫)

அகத்தூடணுவணுவாயண்டமெல்லாந்தானாய
மகத்தாகிநின்றனைநீவாழிபராபரமே (௨௨௬)

காரகமாங்காப்பவைக்கைக்கண்ணூடுமென்கண்ணே
வாரமவைத்துக்காத்தனைநீவாழிபராபரமே. (௨௨௭)

பூந்தோராதநதேசமெனபாரபூமியைப்போராடி
யிரநதோருந்தமமதெனபாரெனனேபராபரமே (௨௨௮)

மூர்த்தியெல்லாம்வாழியெங்கண்மோனகுருவாழியருள்
வார்சனைதயென்றும்வாழியன்பாவாழிபராபரமே (௨௨௯)

சொல்லும்பொருளுந்தொடராவருணிறைவிற்
செல்லும்படிக்கருணைசெய்தாய்பராபரமே (௨௩௦)

இறைவரைக்குள்ளாகவெண்ணரியசித்திமுத்தி
பெற்றவர்களெத்தனைபேர்பேசாய்பராபரமே. (௨௩௧)

நாடுகருநிசாணுட்டியபாளயமு
மீடுசெயுமோமுடிவிலெந்தாய்பராபரமே. (௨௩௨)

தேடுந்திரவியமுஞ்சோந்தமணிப்பெட்டகமுங்
கூடவருந்துணையோகூறாய்பராபரமே. (௨௩௩)

தேடாததேடினரேசெங்கைத்துலாக்கோல்போல்
வாடாச்சமநிலையில்வாழவாராபராபரமே. (௨௩௪)

நீராய்க்கசிந்துருகிநெட்டுயிர்த்துநின்றேனைப்
பாராததென்னேயுபகாரப்பராபரமே. (௨௩௫)

உள்ளபொருளாவீட்டென்மூன்றுமன்றேதான்
கொள்ளைகொண்டநீயெனகுறைதீர்பராபரமே. (௨௩௬)

ஆழ்ந்தாயேயிவ்வுலகிலல்லலெல்லாந்தீர்ந்தருளால்
வாழ்ந்தாயேயென்றனைநீவாழிபராபரமே. (௨௩௭)

தாராவருளையெல்லாந்தந்தெனையுநின்னருளில்
வாராயோவென்றனைநீவாழிபராபரமே (௨௩௮)

ஆசையுன்மீதல்லாலருளறியவேறொன்றிற
பாசமவையேனினிக்கருணைப்பாங்காறபராபரமே. (௨௩௯)

ஆதியந்தநீகுருவாயாண்டதல்லானின்னையறிய
போதனையுமுண்டோபுகலாயபராபரமே. (௨௪0)

தானாகவந்துதடுத்தாண்டெனையின்ப
வானாகச்செய்ததவினபவானேபராடரமே (௨௪௧)

பற்றறிருக்குநெறிபற்றிற்கடனமலையுஞ்
சுற்றறிலேனக்குமனஞ்சொன்னேனபராபரமே. (௨௪௨)

படிப்பற்றுக்கேள்வியற்றுப்பற்றற்றுச்சிந்தைதத
துடிப்பற்றார்க்கன்றேசுகங்காண்பராபரமே. (௨௪௩)

சத்தாகிநின்றோர்சடங்களிலிங்கமென
வைத்தாருமுண்டேயெனவாழ்வேபராபரமே. (௨௪௪)

சித்தநிருவிகற்பஞ்சேர்ந்தாருடற்றீபம
வைத்தகாப்பூரமபோலவயங்குமபராபரமே. (௨௪௫)

ஆதிகாலத்திலெனையாண்டனையேயிப்பானீ
போதியெனினெங்கேநானபோவேனபராபரமே. (௨௪௬)

நாவழுத்துஞ்சொன்மலரோநாளுநீக்கும்பொன்மலரோ
தேவையுனக்கின்னதென்றுசெப்பாயபராபரமே (௨௪௭)

இன்னறரும்பாகாய்க்கருப்புவட்டாய்ச்சுகற்கண்டா
யின்னமுதாயென்னுளிருந்தாயபராபரமே. (௨௪௮)

சிற்பரமேதறபரமேதெய்வசசுருதிசொன்ன
வறபுதமேயனபேயறிவேபராபரமே. (௨௪௯)

அறிவிப்பானீயென்றுஐம்புலனகடந்தங்
நெறிநிற்பார்யாரேநிகழ்த்தாயபராபரமே. (௨௫0)

அந்தக்கரணமெனுமாகாதபேய்களெனை
வந்துபிடித்தாட்டவழக்கோபராபரமே. (௨௫௧)

ஐவரொடுங்கூடாமலந்தரங்கசேவைதந்த
தெய்வவறிவேசிவமேபராபரமே. (௨௫௨)

அருளாகிநின்றசுகமாகாமலேயோ
விருளாகிநிற்கவியல்போபராபரமே (௨௫௩)

அன்பரெல்லாமின்பமருந்திடவுமியானொருவன்
றுன்புறுதனன்றோநீசொல்லாய்பராபரமே. (௨௫௪)

சந்ததமுநின்கருணைசாற்றுவதல்லால்வேறு
சிந்தையறியேனுனசித்தம்பராபரமே. (௨௫௫)

நானென்னுங்குள்ளநாட்டத்தாலென்னைவிட்டுப்
போனாலுமுன்னைவிட்டுப்போகேன்பராபரமே. (௨௫௬)

இக்காயம்பொய்யென்றேரீட்டத்துனக்கபயம்
புக்காதாருண்டோபுகலாய்பராபரமே. (௨௫௭)

தானதலபூரணமேசாருமிடமுண்டுயிரும்
வானாதியுமொழுங்காய்மன்னும்பராபரமே. (௨௫௮)

உன்னுமனங்கர்ப்பூரவண்டைபோலேகரைய
மின்னுமானந்தவிளக்கேபராபரமே. (௨௫௯)

நாட்பட்டலைந்தநங்கமெல்லாந்திரவுனக்
காட்பட்டுந்துன்பமெனக்காமோபராபரமே. (௨௬0)

பாவிபடுங்கணசலக்கம்பாராதுமிரங்காதிருந்தா
லாவிக்குறுதுணையாராயாபராபரமே. (௨௬௧)

நின்னிறைவேதாரகமாய்நின்றசுகமெய்தாம
லென்னிறைவேபாவித்தேனென்னேபராபரமே. (௨௬௨)

நின்னைச்சரண்புகுந்தானீகாக்கல்வேண்டுமல்லா
லென்னைப்புறம்விடுதலென்னேபராபரமே. (௨௬௩)

பாருந்துன்பமெல்லாம்வந்துறாததானின்செவியி
லேறாதவாறேதியம்பாய்பராபரமே. (௨௬௪)

விஞ்சுபுலப்பாடனைத்தும்வீறுதன்பஞ்செய்யவந்த
வஞ்சுபுலவேடருக்குமாற்றேன்பராபரமே. (௨௬௫)

கன்னங்கரியநிறக்காமாதிராக்ஷசப்பேய்க்
கென்னையிலக்காகவைத்ததென்னேபராபரமே. (௨௬௬)

சித்திநெறிகேட்டல்செகமயக்கஞ்சென்மமற
முத்திநெறிகேட்டன்முறைகாண்பராபரமே. (௨௬௭)

சிந்தைசிதையச்சிதையாதவானந்த
மெந்தவகையாலேவந்தெய்தும்பராபரமே. (௨௬௮)

கூர்த்தவறிவாலறியக்கூடாதெனக்குரவன்
றோத்தபடிதானே திரிந்தேன்பராபரமே. (௨௬௯)

பத்தரருந்துய்யபரசுகமயானருந்த
வெத்தனைநாள்செல்லுமியம்பாய்பராபரமே. (௨௭0)

தீரத்திறந்தூரவுசோராமலிவ்வுலகிற்
பாரத்தனம்பேசல்பண்போபராபரமே. (௨௭௧)

இந்தவெளியினையுண்டேப்பமிடப்பேரறிவாத்
தந்தவெளிக்கேவெளியாய்ச்சார்ந்தேன்பராபரமே. (௨௭௨)

உணராதுமுன்னேநாடாதுணர்ந்தவையேநாடி
யிணக்குறுமென்னேழைமைதானென்னேபராபரமே. (௨௭௩)

உண்டுபோலின்றாமுலகைத்திரமென்னவுட்
கொண்டோனைப்பெற்றபலன்கூறாய்பராபரமே (௨௭௪)

உள்ளபடியாதுமெனவுற்றுணர்ந்தேனக்கணமே
கள்ளமனம்போனவழிகாணேன்பராபரமே (௨௭௫)

சித்தமவுனஞ்செயல்வாக்கெலாமவுனஞ்
சுத்தமவுனமென்பாறறேன்றிறபராபரமே. (௨௭௬)

எண்ணிலபலகோடியுயிரெத்தனையோவத்தனைக்குங்
கண்ணிறகலந்தவருட்கண்ணேபராபரமே. (௨௭௭)

எனக்கினியாருன்போலுமில்லையென்றால்யானு
முனக்கினியனாகவுளவேன்பராபரமே. (௨௭௮)

அண்டபிண்டங்காணென்னகமும்புறமுமொன்றாக்
கண்டவெனைநீகலந்தகாலம்பராபரமே. (௨௭௯)

எத்தனையோகோடியெடுத்தெடுத்துச்சொன்னாலுஞ்
சித்தமிரங்கிலையென்செய்வேன்பராபரமே. (௨௮0)

அன்றந்தால்வருக்குமற்புதமாநீயுரைத்த
தொன்றந்தவார்த்தையெனக்குண்டோபராபரமே. (௨௮௧)

அப்பனென்றுமன்னையென்றுமாரியனென்றுமுன்னையே
செப்புவதுமுன்னிலையின்சீர்காண்பராபரமே. (௨௮௨)

கூடுங்கணமுமந்தக்காலர்வரும்போதெதிர்ந்து
வெட்டுநேதளமோவிளம்பாய்பராபரமே. (௨௮௩)

பேசாதமோனநிலைபெற்றன்றோநின்னருளாம்
வாசாமகோசரந்தானவாய்க்கும்பராபரமே. (௨௮௪)

கற்றாலுங்கேட்டாலுங்காயமழியாதசித்தி
பெற்றாலுமின்பமுண்டோபேசாய்பராபரமே (௨௮௫)

கண்டவடிவெல்லாங்கரைகின்றவஞ்சனம்போ
லண்டமெல்லாநின்னருளேயன்றோபராபரமே (௨௮௬)

தன்செயலாலொன்றுமிலைதானென்றுணைபாவி
நின்செயலாய்நில்லாநிலைவேண்பராபரமே (௨௮௭)

கொலைகளவுகட்காமங்கோபமவிட்டாலன்றோ
மலையிலக்காநின்னருடானவாய்க்கும்பராபரமே. (௨௮௮)

தன்னையறியாதுசகந்தானாயிருந்துவிட்டா
லுன்னையறியவருணுண்டோபராபரமே (௨௮௯)

ஒன்றிரண்டென்றுணருணர்வுகொடுத்துள்ளபடி
யென்றுமெனைவையாயிறையேபராபரமே. (௨௯௦)

கருதுமடியார்களுள்ளங்காணவெளியாகுந்
துரியநிறைவானசுகமேபராபரமே. (௨௯௧)

பொய்குவித்தநெஞ்சனருட்பொற்பறிந்துநிக்கலைத்துங்
கைகுவித்துநிற்பதெந்தக்காலம்பராபரமே. (௨௯௨)

அத்துவிதமானவயிக்கபவனுபவமே
சுத்தநிலையாநிலையாச்சொல்வாய்பராபரமே. (௨௯௩)

வைத்தசுவரலம்பின்மணம்போமோமாயையினோக்
கெத்தனைபோதித்துமென்னுமெந்தாய்பராபரமே. (௨௯௪)

பூட்டற்றதேகமற்றுப்போகுமுன்னேநின்னருளைக்
காட்டத்தகாதோவெனக்கணேபராபரமே. (௨௯௫)

சொல்லிற்பதாகவைந்துசொன்முடிவுகாணுந்தார்
நெல்லிறப்பதாபோலநிற்பாயபராபரமே. (௨௯௬)

அழுக்காற்றுநெஞ்சமழுங்கியபுன்மாக்க
ளிழுக்காற்றுவின்பநலமெய்தார்பராபரமே. (௨௯௭)

தேகாதிபொய்யெனவேதேர்ந்தவுபசாந்தருக்கு
மோகாதியுண்டோமொழியாய்பராபரமே. (௨௯௮)

சாதனையெல்லாமவிழத்தற்போதகங்காட்டாதோ
போதனைநீநல்குவதெப்போதோபராபரமே. (௨௯௯)

ஒன்றுமறியாவிருளாமுள்ளம்படைத்தவெனக்
கென்றுகதிவருவதெந்தாய்பராபரமே (௩௦௦)

சிந்திக்குந்தோறுமென்னுடசிறக்கமாயூறுமூறாதிப்
புந்திக்குணின்றவருடபொற்பேபராபரமே (௩௦௧)

என்றுமடைந்தோர்கட்கிரங்காகுறிப்பையுந்துங்
கன்றையுதைக்காலிக்கதைகாணபராபரமே (௩௦௨)

குற்றங்குறையக்குணமேலிடவருளை
யுற்றவரேயாவிக்குறவாய்பராபரமே. (௩௦௩)

ஓருணையாலவாய்க்குமுணமைக்கோரணந்தநூலகோடிப
பேருணையாற்பேசிலென்னபேறும்பராபரமே. (௩௦௪)

சொல்லுஞ்சமயநெறிச்சுற்றுக்குளேசுழலு
மல்லலொழிவதெனறகையோபராபரமே. (௩௦௫)

பிடித்ததையேஸ்தாபிக்கும்பேராணவத்தை
யடித்துத்துரத்தவல்லாரார்காணபராபரமே. (௩௦௬)

நேசத்தாலின்னனினைக்குநினைவுடையா
ராசைக்கடலிலழுந்தார்பராபரமே (௩௦௭)

கள்ளத்தக்ட்டுணவுங்காரியமோநானொருசொற்
கொள்ளாததோஷமன்றோகூறாய்பராபரமே. (௩௦௮)

சென்றவிடமெல்லாந்திருவருளேதாரகமா
நின்றவாகேயானந்தநிட்டைபராபரமே. (௩௦௯)

நீட்சிதுறுகலில்லாநித்யசுகாரம்பசுக
சாட்சியாமுன்னைவந்துசார்ந்தேன்பராபரமே (௩௧௦)

வாஞ்சித்தத்துவமாய்மனனினின்றகாரணநீ
நாஞ்சிறப்பதெந்தநாளோபராபரமே (௩௧௧)

காட்டத்திலங்கிசெய்யவந்தாலென்னவுன்று
நாட்டத்தினூடுவந்தடபேபராபரமே. (௩௧௨)

நித்திரையாயத்தானேநினைவயாந்தாணித்தசித்தத்
செத்தபிழைப்பானதெங்கள்செயலைபராபரமே. (௩௧௩)

இன்பநிட்டையெய்தாமல்யாதெனினுஞ்சென்றுமனந்
துன்புறுதல்வன்பிறவித்துக்கம்பராபரமே. (௩௧௪)

பொய்யுலகமெய்யானபோதமிலைகண்டோர்க்கோ
ரையமிலையையமிலையையபராபரமே. (ருகரு)

மந்திரத்தையுன்னிமயங்காதெனக்கினியோர்
தந்திரத்தைவைக்கத்தகாதோபராபரமே. (ருகசு)

வினைகருணைபூத்தசெனனமோவியுயிர்க்குயிராயத்
தனைகருணைதோனறவருடாயநீபராபரமே. (ருகஎ)

தனமயமாயநின்றநிலைதானேதானாகிநின்ற
னினமயமாமெல்லாநிகழுமபராபரமே. (ருகஅ)

ஏங்கியிடையுநெஞ்சவேழைமைபநீவாவெனறே
பாஙகுபெறசசெயவதுனைறோபாரயபராபரமே. (ருகக)

ஆணடநினைநீயகாவடிமைகளயாமாணவத்தைப்
பூண்டதெனனசனமமபுகலாய்பராபரமே. (ருஉ0)

எஙசனுநீயெனறுவிருந்தபடியெயதாம
லஙகுமிஙகுமெனறலையலாமோபராபரமே (ருஉக)

கற்குமதுவுணடுகளிசததலலானினனருளி
னிற்குமதுநததுணடோநீதானபராபரமே. (ருஉஉ)

அணடபகிரணடமறியாதவினைவடிவைக
கணடவரைககணடாறகதியாம்பராபரமே. (ருஉரு)

கலககமுறநெஞ்சைககலககிததிருமபத
துலககுபவனியலையோசொலலாயபராபரமே. (ருஉச)

சிநதையுமெனபோலசசெயலற்றடஙகிவிட்டால்
வநததெலாநினசெயலாவாழவேனபராபரமே (ருஉரு)

பந்தமெலாந்தீரப்பரஞ்சோதிநீகுருவாய்
வந்தவடிவைமறவேனபராபரமே. (ருஉசு)

தானந்தமானசகசநிருவிகறப
வானந்தமிட்டையருளையாபராபரமே. (ருஉஎ)

அல்லலெல்லாந்தீரவெனக்கானந்தமாகவொரு
சொலலைஎன்பால்வைத்ததையென்சொல்வேன்பராபரமே. (ருஉஅ)

சிநதைமயக்கமறச்சின்மயமாய்நின்றவுன்னைத்
தந்தவுணகெனனையுநான்றநதேனபராபரமே. (ருஉக)

மைகாட்டுமாயைமயக்கமறநீகுருவாய்க்
கைகாட்டவுங்கனவுகண்டேனபராபரமே. (ருக0)

மால்வைத்தசிந்தைமயக்கறவென்சென்னிமிசைக்
கால்வைக்கவுங்கனவுகண்டேன்பராபரமே. (௩௩௧)

மண்ணானமாயையெல்லாமாண்டுவெளியாகவிரு
கண்ணாரவுங்கனவுகண்டேன்பராபரமே. (௩௩௨)

மண்ணீர்மையாலேமயங்காதுன்கையாலென்
கண்ணீர்துடைக்கவுநான்கண்டேன்பராபரமே. (௩௩௩)

உள்ளதுணராவுணர்விலிமாபாவியென்றே
மெள்ளமெள்ளக்கைநெகிழவிட்டாயபராபரமே (௩௩௪)

எல்லாநினதுசெயலெனவென்றெண்ணுமெண்ணமுநீ
யல்லாலெனக்குளதோவையாபராபரமே. (௩௩௫)

பந்தமறக்கிருகைப்பற்றொழிந்தேனென்றழுது
மிந்தமயக்கமென்கேன்பராபரமே, (௩௩௬)

காட்சியெல்லாங்கண்ணைவிடக்கண்டதுண்டோயாதினுக்கு
மாட்சியுனதருளேயன்றோபராபரமே. (௩௩௭)

எட்டுத்திசையுமொன்றாயினமாய்நின்றவுன்னை
விட்டுப்பிரியவிடவேறோபராபரமே. (௩௩௮)

பிரியாதுயிர்க்குயிராய்ப்பின்னமறவோங்குஞ்
செறிவேயறிவேசிவமேபராடரமே. (௩௩௯)

ஏதேதுசொன்னாலுமெள்ளளவுநீயிரங்காச
சூதேதெனக்குளவுசொல்லாய்பராபரமே. (௩௪௦)

கற்பனையாப்பாடினேனென்கண்ணீருங்கம்பலையுஞ்
சொற்பனந்தாங்காணேனெனச்சொல்லவேன்பராபரமே. (௩௪௧)

வன்பொன்றநீங்காமனதிறப்பமாறுப்பே
ரன்பொன்றும்போதுமெனக்கையாபராபரமே. (௩௪௨)

ஏதுந்தெரியாவெளியேனைவாவெனநின்
போதநிலைகாட்டிற்பொருந்தாதோபராபரமே. (௩௪௩)

ஓசமெல்லாமொழிந்தேற்குன்றெய்வவரு
டாராதிருக்கத்தகுமோபராபரமே. (௩௪௪)

மோனந்தருஞானமூட்டியெனக்குவட்டா
வானந்தவாழ்க்கையருளாயபராபரமே. (௩௪௫)

வாடுமுகங்கண்டெனைவாடாமலேகாத்த
நீடுங்கருணைநிறைவேபராபரமே. (௩௪௬)

புந்தியினுனின்னடியைப்போற்றுகின்றமெய்யடியார்
சிந்தையிற்போயினறியானம்பராபரமே. (௧௪௭)

உனக்குவமையாக்கருணையுள்ளவரும்வன்மைக்
கெனக்குவமையானவருமில்லைபராபரமே. (௧௪௮)

தாயிருந்தும்பிள்ளைதளர்ந்தாற்போலெவ்விடத்தும்
நீயிருந்துநான்றளர்ந்துநின்றேன்பராபரமே (௧௪௯)

வாயாற்கிணறுகெட்டவாறேபோல்வாய்பேசிப்
பேயானாக்கின்பமுண்டோபேசாய்பராபரமே. (௧௫௦)

பாவமென்றாலேதும்பயமின்றிச்செய்யவிந்தச்
சீவனுக்கார்போதந்தெரித்தார்பராபரமே. (௧௫௧)

இன்பநிருவிகற்பமின்றேதாவன்றெனிலோ
துன்பம்பொறுப்பரிதுசொன்னேன்பராபரமே. (௧௫௨)

கற்குநிலைகற்றாற்கருவியவிழாதருளாய்
நிற்குநிலைகற்பதுவேந்தம்பராபரமே. (௧௫௩)

காச்சச்சுடாவிடும்பொற்கட்டிபோனின்மலமாய்ப்
பேச்சறவரேபிறவாய்பராபரமே. (௧௫௪)

பற்றொழிந்துசிந்தைப்பதைப்பொழிந்துதானேதா
னற்றிருப்பதென்றைக்கமைப்பாய்பராபரமே. (௧௫௫)

உருவெளிதான்வாதவூருத்தமாகக்கல்லாலின்முக
குருவழிநின்றாக்குமுண்டோகூறாய்பராபரமே. (௧௫௬)

தேகமியாதேனுமொருசித்திபெறச்சீவன்முத்தி
யாகுநெறிநல்லநெறியையாபராபரமே. (௧௫௭)

உலகநெறிபோற்சடலமோயவுயிர்முத்தி
யிலகுமெனல்பந்தவியல்போபராபரமே (௧௫௮)

பரமாப்பரவெளியாப்பார்ப்பதல்லான்மற்றெவர்க்குந்
திரமேதுமில்லைநன்றாத்தேர்ந்தேன்பராபரமே. (௧௫௯)

தேடுவேனின்னருளைத்தேடுமுன்னேயெய்த்திண்ட
மாடுவேனானந்தமாவேன்பராபரமே. (௧௬௦)

உள்ளங்குழையவுடல்குழையவுள்ளிருந்த
கள்ளங்குழையவென்றுகாண்பேன்பராபரமே. (௧௬௧)

பட்டப்பகல்போலப்பார்த்தசிந்தைமாளியெல்லாம்
வெட்டவெளியாகவிளங்குபராபரமே. (௧௬௨)

பார்க்கினணுப்போற்கிடந்தபாழ்ஞ்சிறைதமாளிதென்னை
யார்க்குச்சரியிடலாமையாபராபரமே. (௩௬௩)

பாட்டுககோவன்பினுக்கோபததிககோவனபாதஙக
ணீட்டுககெல்லாஙகுறுகினன்றோயபராபரமே (௩௬௪)

முத்தாந்தவீதசேமுளைசகுநிலமாயெழுநத
சித்தாந்தமாக்கசசிறபபேபராபரமே. (௩௬௫)

உன்றுவெளியாயுறங்காதபேருணாவா
யெனறுவிககுளளேயிருநதாயபராபரமே (௩௬௬)

தத்துவமெல்லாமகனறதன்மையாககுசசினமயமா
நிததமுததசுததநிறைவேபராபரமே. (௩௬௭)

உள்ளகொதிப்பசலவுளளுளளேயானநத
வெள்ளமலாகருணைவேணடுமயபராபரமே. (௩௬௮)

எனனைப்புரபபதருளினகடனுமென்கடனு
னினனிறபணியறவேநிறகைபராபரமே (௩௬௯)

தானேயானன்னிலையைததநதவருளானநத
வானேமனுநீதவாழ்வேபராபரமே. (௩௭0)

மண்ணுதிபூதமெலலாமவைததிருநசநின்னிறைவைக
கண்ணூரககணடுகளிததேனபராபரமே (௩௭௧)

அறியாமையீதென்றறிவித்தவன்றேதான
பிறியாவருணிலையுமபெறறேனபராபரமே. (௩௭௨)

தீதெனவுநனறெனவுநதேர்நதுநான்றோநதபடி
யேதுநடககவொட்டாதெனனேபராபரமே. (௩௭௩)

கணடவறிவகணடாகாரமெனமெய்யறிவிற
கொண்டவாகசேமுததிகொடுபபாயபராபரமே. (௩௭௪)

ஈறுகவல்வினைநானென்னுமலினபசுகம்
பேறும்படிக்கடிமைபெறறேன்பராபரமே. (௩௭௫)

பெற்றாரனுபூதிபேசாதமோனநிலை
கற்றுருணைப்பிரியாகண்டாய்பராபரமே (௩௭௬)

நீயோநானெனனறநினைபபுமறப்புமறந
தாயேயனையவருடநதாயபராபரமே. (௩௭௭)

சஞ்சலமற்றெலலாநீதானெனறுணர்ந்தேனென்
னஞ்சலியுங்கொள்வாயரசேபராபரமே. (௩௭௮)

பூதமுதனாதவரைபொய்யென்றமெய்யரெல்லாங்
காதலித்தவினைப்க்கடலேபராபரமே. (௩எகூ)

வாக்குமனமொன்றுபட்டவார்த்தைதப்பல்லால்வெவ்வேறாய்ப்
போககுடையவராததைபொருந்தேன்பராபரமே. (௩அ0)

வன்மையின்றியெல்லாமதித்துணர்வாய்க்காகெடுவேன்
றன்மையொன்றுகதோயததடையோபராபரமே. (௩அக)

பத்தர்சித்தர்வாழிபரிபக்குவர்களவாழிசெஙகோல்
வைத்தவாகள்வாழிகுருவாழிபராபரமே. (௩அஉ)

கலலாதேனுனுங்கறறுணாந்தமெய்யடியார்
சொல்லாலேஙினேதொடாநதேனபராபரமே. (௩அ௩)

சொல்லிறப்பசசற்குருவாய்தோனறிசசுகஙகொடுதத
நல்லுரைககேகொததடிமைநான்காண்பராபரமே. (௩அச)

மூத்திககுவிததானமோனக்கருமபுவழி
திததிததிடவிளைநததேனேபராபரமே. (௩அரு)

நிததிரையுமபாழ்ததநினைவு மற்றுசிறபதுவோ
சுததவருணிலேநீசொல்லாய்பராபரமே. (௩அசு)

மண்ணுமறிகடலுமறறுளவுமெலலாமுன
கணணிலிருககவுநானகணடேனபராபரமே (௩அஎ)

பூட்டிவைததுவஞசப்பொறிவழியேயென்றனைநீ
யாட்டுகினறதேதோவறியேனபராபரமே. (௩அஅ)

பொய்யுணாவாயிரதப்புழுக்கூட்டைககாததிருநதே
னுய்யுமவகையுமுளதோபராபரமே. (௩அகூ)



## பைங்கிளிக்கண்ணி.

அந்தமுடனாதியளவாமலெனைனறிவிற்
சுந்தரவான்சோதிதுலங்குமோபைஙகிளியே. (க)

அகமேவுமணணுகவென்னல்லவெல்லாஞ்சொல்லிச்
சுகமானநீபோய்ச்சுகஙகொடுவாபைஙகிளியே. (உ)

ஆவிகளாவியெனுமற்புதனார்சிற்சுகந்தான்
பாவிக்குஙகிட்டுமோசொல்லாய்நீபைங்கிளியே. (௩)

ஆருமறியாமலெனையந்தரங்கமாகவந்து
சேரும்படியிறைககுச்செப்பிவாபைங்கிளியே. (ச)

ஆருனகண்ணீர்க்கென்னங்கபங்கமானதையுங்
கூறுததெனனேகுதலைமொழிபைங்கிளியே. (௫)

இன்பருளவாடையழுககேறுமெமக்கணணலசுத்த
வம்பரமாமாடையளிப்பானேபைங்கிளியே. (௬)

உன்னுமலொன்றிரண்டென்றோராமல்வீட்டுநெறி
சொன்னன்வரவும்வகைசொலலாயநீபைங்கிளியே. (௭)

ஊருமிலாபேருமிலாருற்றார்பெற்றாருடனே
யாருமிலாரெனனையறிவாரோபைங்கிளியே. (௮)

ஊனைப்பாராமலெனகருள்ளகததுநாயகனா
சீனைப்பார்ததாறகருணைசெயவாரோபைங்கிளியே. (௯)

எனறுவிடியுமிறைவாவோவென்றென்று
நினறநிலையெலலாநிகழ்ததாயநீபைங்கிளியே. (௧௦)

எநதமடலூடுமெழுதாவிறைவடிவைச்
சிந்தைமடலாவெழுதிசசோபபேனேபைங்கிளியே. (௧௧)

கண்ணுண்மணிபோலினபஙகாட்டியெனைபபிரிநத
திணணியருமினனம்வநதுசோவாரோபைங்கிளியே. (௧௨)

ஏடார்மலாசூடேனெய்பெருமான்பொனனடியாம
வாடாமலர்முடிககுவாய்ககுமோபைங்கிளியே. (௧௩)

கலலேன்மலரோனகனிந்தவன்பேபூசையெனற
நலலோர்பொல்லாவெனையுநாடுவரோபைங்கிளியே (௧௪)

கண்டதனைக்கண்டுகலக்கந்தவிரொணவே
விண்டபெருமானையுநான்மேவுவனோபைங்கிளியே. (௧௫)

காணாதகாட்சிகருத்துவந்துகாணாமல்
வீணாள்கழிததுமெலிவேனோபைங்கிளியே (௧௬)

காந்தமிரும்பைக்கவர்ந்திழுததாலென்னவருள
வேந்தனெனையிழுத்துமேவுவனோபைங்கிளியே, (௧௭)

காதலால்வாடினதுங்கண்டனையேயெமமிறைவர்
போதரவாயின்பம்புசிப்பேனோபைங்கிளியே. (௧௮)

கிட்டிககொண்டன்பருண்மை டசேளாப்பலவடிகொள்
பட்டிக்குமின்பமுண்டோசொல்லாய்நீபைங்கிளியே. (௧௯)

கிட்ரோய்நெஞ்சிற்கிளர்வார்தழுவவென்று
னெட்ரோராவரவாநேசமென்னேபைங்கிளியே. (௨௦)

கூடறுங்குணமுமில்லாக்கொள்கையினாரென்கவலை
யாறும்படிக்குமணைவாரோபைங்கிளியே. (உக)

சின்னஞ்சிறியேன்றன்சிந்தைகவர்ந்தாரிறைவர்
தன்னந்தனியேதவிப்பேனோபைங்கிளியே. (உஉ)

சிந்தைமருளைத்தெளிவித்தென்னையாள
வந்தகுருநாதனருள்வாய்க்குமோபைங்கிளியே. (உங)

சொலவிறந்துநின்றசுகரூபப்பெம்மானை
யல்லும்பகலுமணைவேனோபைங்கிளியே. (உச)

தற்போதத்தாலேதலைகீழதாகவைய
னற்போதவின்புவரநாட்செலுமோபைங்கிளியே. (உரு)

தன்னையறியுந்தருணந்தனிற்றலைவ
ரென்னையணையாதவண்ணமெங்கொளித்தார்பைங்கிளியே. (உசு)

தாங்கரியமையலெல்லாந்தந்தென்னைவிட்டின்னருளாம
பாங்கியைச்சேர்ந்தாரிறைக்குப்பண்போசொல்பைங்கிளியே. (உஎ)

தாவியதோமர்க்கடமாந்தனமைவிட்டேயண்ணலிட்ட
தோவியம்போனிறகினென்னையுள்குவரோபைங்கிளியே (உஅ)

தீராக்கருவழக்கைத்தீர்வையிட்டங்கென்னையினிப்
பாரோருதாண்டானைப்பற்றுவனோபைங்கிளியே. (உகூ)

தூங்கிவிழித்தென்னபலன்றூங்காமற்றூங்கிநிற்கும்
பாங்குகண்டாலன்றோபலன்காண்பேன்பைங்கிளியே. (ஙo)

தொல்லைகவலைதொலைத்துத்தொலையாத
வெல்லையிலாவின்பமயமெய்துவனோபைங்கிளியே. (ஙக)

நன்னெஞ்சத்தன்பரெல்லாநாதனைச்சேர்ந்தின்பணைந்தார்
வன்னெஞ்சத்தாலேநான்வாழ்விழந்தேன்பைங்கிளியே. (ஙஉ)

நானேகருதினவரநாடார்சும்மாவிருந்தாற்
றானேயணைவரவர்தன்மையென்னோபைங்கிளியே. (ஙங)

நீக்குமிழிபோன்றவுடனிற்கையிலேசாசுவதஞ்
சோக்கவறியாமற்றிகைப்பேனோபைங்கிளியே. (ஙச)

நெஞ்சகத்தில்வாழ்வார்நினைக்கின்வேறென்றணையார்
வஞ்சகத்தாரல்லரவர்மார்க்கமென்னோபைங்கிளியே. (ஙரு)

பன்மூத்திரைச்சமயம்பாழ்படக்கல்லாலடிவாழ்
சின்மூத்திரையரசைச்சேர்வேனோபைங்கிளியே. (ஙசு)

பச்சைகண்டநாட்டிற்பறக்குமுனைப்போற்பறந்தே
னிச்சையெல்லாமண்ணறகியம்பிவாபைங்கிளியே. (௩௭)

பாசபந்தஞ்செய்ததுன்பம்பாராமலெம்மிறைவ
ராசைதந்ததுன்பமதற்காற்றேனைபைங்கிளியே. (௩௮)

பாராசையற்றிறையைப்பற்றறநானபற்றினற
பூராயமெல்லாம்புகன்றுவாபைங்கிளியே. (௩௯)

பேதைப்பருவத்தேபின்றொடாந்தெனபக்குவமுஞ
சோதித்துவண்ணல்வந்துதோய்வாரோபைங்கிளியே. (௪0)

பைம்பயிரைநாடுமின்போற்பாபூத்தபைங்கொடிசோ
செம்பயிரைநாடித்திகைத்தேனேபைங்கிளியே. (௪௧)

பொய்க்கூடுகொண்டுழலும்புலனேவெய்யமிறைவா
மெய்க்கூடுசென்றுவிளம்பிவாபைங்கிளியே. (௪௨)

பொய்ப்பணிவேண்டேனைப்பொருட்படுத்தியண்ணலென்பாள
மெய்ப்பணியுந்தந்தொருகாலமேவுவனோபைங்கிளியே. (௪௩)

மண்ணுறங்கும்விண்ணுறங்குமற்றுளவெலாமுறங்குங
கண்ணுறங்கேனெம்மிறைவாகாதலாற்பைங்கிளியே. (௪௪)

மட்டுப்படாதமயக்கமெலாந்தீரவென்னை
வெட்டவெளிவீட்டிலண்ணனமேவுவனோபைங்கிளியே. (௪௫)

பாலைவளர்த்தெனைவளர்த்திறைவாபனனெறியாம
பாலைவனத்திலவிட்டபாவமென்னேபைங்கிளியே. (௪௬)

மெய்யினோயமாற்றவுழ்ந்தமெத்தவுண்டெம்மண்ணறநத
மையனோபதீரக்கமருந்துமுண்டோபைங்கிளியே. (௪௭)

மேவுபஞ்சவண்ணமுற்றாய்வீணைசிறையாலலலலுற்றாய்
பாவிபஞ்சவண்ணமபகாந்துவாபைங்கிளியே. (௪௮)

வாய்திறவாவண்ணமெனைவைத்தாண்டாாக்கென்றுயரை
நீதிறவாச்சொல்லினிசமாங்காணபைங்கிளியே. (௪௯)

வாட்டப்படாதமவுனவினைபங்கையாலே
காட்டிக்கொடுத்தானைக்காண்பேனோபைங்கிளியே. (௫0)

வாராவரவாகவந்தருளுமோனருக்கென்
பேராசையெல்லாம்போய்ப்பேசிவாபைங்கிளியே. (௫௧)

விண்ணவர்தம்பாலமுதம்வேப்பங்காயாகவென்பாற்
பண்ணியதெம்மண்ணன்மயல்பார்த்தாயோபைங்கிளியே. (௫௨)

விண்ணுள்வளியடங்கிவேறற்றதென்னவருட்
கண்ணுளடங்கிடவுங்காண்பேனோபைங்கிளியே. (ருங)

விண்ணோர்நிலவுதவழ்மேடையிலெல்லாருமுற
மண்ணானவீட்டிலென்னைவைத்ததெனோபைங்கிளியே. (ருச)

உள்ளத்தினுள்ளேயொளித்திருந்தென்கள்ளமெல்லாம்
வள்ளலறிந்தாலெனக்குவாயுமுண்டோபைங்கிளியே. (ருரு)

ஆகத்தைநீக்குமுன்னேயாவித்துணைவரைநா
னாகத்தின்வண்ணந்தழுவுவனோபைங்கிளியே. (ருசு)

தானேசுபாவந்தலைப்படநின்றான்ஞான
வானவரும்வருவாரோபைங்கிளியே. (ருஎ)

கள்ளத்தலைவரவாகைகாட்டிப்பேசாம
லுள்ளத்திலவந்தவுபாயமெனோபைங்கிளியே. (ருஅ)

---

## எந்நாட்கண்ணி.

### தெய்வ வணக்கம்.

நீரார்ந்தவேணிநிலவெறிப்பமன்றாடுங்
காரார்ந்தகண்டனையான்காணுநாளெந்நாளோ. (க)

பொன்னுருமன்றுணமணிப்பூவைவிழிவண்டுசுற்று
மென்னாமுதினலமிசிப்பதெந்நாளோ. (உ)

நீங்கிமலக்கட்டறுத்துநேரேவெளியிலெம்மைத்
தூங்கிவைக்குந்தாளைத்தொழுதிடுநாளெந்நாளோ. (ங)

கருமுகங்காட்டாமலென்றுங்கர்ப்பூரம்வீசுந்
திருமுகமேநோக்கித்திருக்கறுப்பதெந்நாளோ (ச)

வெஞ்சேலெனும்விழியார்வேட்கைநஞ்சுக்கஞ்சினரை
யஞ்சேலெனுங்கைக்கபயமென்பதெந்நாளோ. (ரு)

ஆறுசமயத்துமதுவதுவாய்நின்றிலகும்
வீறுபரைதிருத்தாண்மேவுநாளெந்நாளோ. (சு)

பச்சைநிறமாய்ச்சிவந்தபாகங்கலந்துலகை
யிச்சையுடனீன்றாளையாங்காண்பதெந்நாளோ. (எ)

ஆதியந்தங்காட்டாதகண்டிதமாய்நின்றுணர்த்தும்
போதவடிவானடியைப்போற்றுநாளெந்நாளோ. (அ)

கங்கைநிலவுசடைக்காட்டானைத்தந்தையெனும்
புங்கவெணைக்கோட்டானைப்பதம்புந்திவைப்பதெந்நாளோ. (கூ)

அஞ்சுமுகங்காட்டாமலாறுமுகங்காட்டவந்த
செஞ்சரணச்சேவடியைச்சிந்தைவைப்பதெந்நாளோ. (க0)

தந்தையிருதாளணிந்துத்தம்பிரான்றுளசேர்ந்த
வெந்தையிருதாளிணைக்கேயினபுறுவதெந்நாளோ. (கக)

## குருமரபின்வணக்கம்.

தூய்யகரமலரார்ச்சொல்லாமற்சொன்னவுண்மை
யையனைக்கல்லாலரசையாமணைவதெந்நாளோ (க)

சிந்தையினுக்கெட்டாதசிற்சுகத்தைக்காட்டவல்ல
நந்தியடிக்கீழ்க்குடியாய்நாமணைவதெந்நாளோ. (உ)

எந்தைசனற்குமாரனுதியெமையாட்கொள்வான
வந்ததவத்தினரைவாழ்த்துநாளெந்நாளோ. (ங)

பொய்கண்டாரகாணுப்புனிதமெனுமத்துவித
மெய்கண்டநாதனருண்மேவுநாளெந்நாளோ. (ச)

பார்திவிருத்தத்தாலிப்பாரிவிருத்தமாகவுண்மை
சாதித்தார்பொன்னடியைத்தானபணிவதெந்நாளோ. (ரு)

சிற்றம்பலமன்னுஞ்சின்மயரந்தில்லைநகாக்
கொற்றங்குடிமுதலைக்கூறுநாளெந்நாளோ (சு)

குறைவிலருண்ஞானமுதல்கொற்றங்குடியடிக
ணறைமலர்த்தாட்கன்புபெற்றுநாமிருப்பதெந்நாளோ. (எ)

நாளங்கள்போகாமனன்னெறியைக்காட்டியெமை
யாளவந்தகோலங்கட்கன்புவைப்பதெந்நாளோ. (அ)

என்னறிவையுள்ளடக்கியெனபோலவருமவுனி
தன்னறிவுக்குளளேநான்சாருநாளெந்நாளோ. (கூ)

ஆறொணாமறைநாடினதற்காறுமுண்டாமென்றெமக்குக்
கூறுமவுனியருள்கூடுநாளெந்நாளோ. (க0)

நில்லாமனின்றருளைநேரேபாரென்றவொரு
சொல்லானமவுனியருட்டோற்றுநாளெந்நாளோ. (கக)

வைதிகமாஞ்சைவமவுனிமவுனத்தளித்த
மெய்திகழ்ந்தென்னல்லல்விடியுநாளெந்நாளோ. (கஉ)

வாக்குமனமற்றமவுனிமவுனத்தருளே
தாக்கவுமெனனல்லலெல்லாந்தட்டழிவதெந்நாளோ. (கங)

